உ

ஓம் கம் கணபதயே நம:



ஸ்ரீமத் ஜகத்குரு ஆதிசங்கர பகவத்பாதர்கள்
அருளிச் செய்த

# ஸ்ரீ கணேச பஞ்சரத்னம்

# ॥ श्री गणेशपञ्चरत्नम् ॥

*தமிழ் உரை:*
வாசஸ்பதி

मुदाकरात्तमोदकं सदाविमुक्तिसाधकं
कलाधरावतंसकं विलासिलोकरक्षकम् ।
अनायकैकनायकं विनाशितेभदैत्यकं
नताशुभाशुनाशकं नमामि तं विनायकम् ॥ १ ॥

முதா கராத்த மோதகம் ஸதாவிமுக்தி ஸாதகம்
கலாதராவதம்ஸகம் விலாஸிலோக ரக்ஷகம் ।

அநாயகைக நாயகம் விநாஸிதேப தைத்யகம்
நதா சுபாசுநாசகம் நமாமி தம் விநாயகம் ॥

1. சந்தோஷமாக மோதகத்தைக் கையில் வைத்திருப்பவரும், எப்பொழுதும் மோக்ஷத்தைக் கொடுப்பவரும், பிறைச் சந்திரனைத் தலையிலே தரித்தவரும், உலகை ரக்ஷித்தலை விளையாட்டாகச் செய்பவரும், ஆதரிப்பாரில்லாத ஜனங்களுக்கெல்லாம் ஆதரிக்கும் ஒரே தலைவராக இருப்பவரும், கஜாசுரனை ஸம்ஹரித்தவரும், தன்னை வணங்கியவரது பாபத்தைப் போக்குபவருமான அந்த விநாயகப் பெருமானை நான் நமஸ்கரிக்கின்றேன்.

नतेतरातिभीकरं नवोदितार्कभास्वरं
नमत्सुरारिनिर्जरं नताधिकापदुद्धरम् ।
सुरेश्वरं निधीश्वरं गजेश्वरं गणेश्वरं
महेश्वरं तमाश्रये परात्परं निरंतरम् ॥ २ ॥

நதேதராதி பீகரம் நவோதிதார்க்க பாஸ்வரம்
நமத்ஸுராரி நிர்ஜரம் நதாதிகாபதுத்தரம் ।
ஸுரேச்வரம் நிதீச்வரம் கஜேச்வரம் கணேச்வரம்
மஹேச்வரம் தமாச்ரயே பராத்பரம் நிரந்தரம் ॥

2. தன்னை வணங்காதவர்களுக்கு பயத்தைக் கொடுப்பவரும், உதய சூரியன் போன்ற பிரகாசம் கொண்டவரும், தன்னை நமஸ்கரிக்கின்ற தேவர்களுக்குப் பகைவர்களான அசுரர்களை ஒழிப்பவரும், தன்னை வணங்குபவர்களைப் பெரிய ஆபத்துக்களிலிருந்து காப்பவரும், தேவர்களுக்கெல்லாம் தலைவரும், நவநிதிகளுக்கும் தலைவரும், யானைமுகத் தலைவரும், கணங்களுக்கெல்லாம் ஈச்வரரும், மஹேச்வரரும், மேலானவற்றுக்கெல்லாம்

(23)

லானவருமான அந்த விநாயகப் பெருமானை எப்பொழு
ம் நான் இடைவிடாமல் ஆச்ரயிக்கின்றேன். அதாவது
ணமடைகின்றேன்.

समस्तलोकशंकरं निरस्तदैत्यकुंजरं
दरेतरोदरं वरं वरेभवक्त्रमक्षरं।
कृपाकरं क्षमाकरं मुदाकरं यशस्करं
मनस्करं नमस्कृतां नमस्करोमि भास्वरम्॥ ३ ॥

மஸ்தலோக சங்கரம் நிரஸ்த தைத்ய குஞ்ஜரம்
தரேதரோதரம் வரம் வரேபவக்த்ரமக்ஷரம்।
ருபாகரம் க்ஷமாகரம் முதாகரம் யசஸ்கரம்
மனஸ்கரம் நமஸ்க்ருதாம் நமஸ்கரோமி
பாஸ்வரம்॥

3. அகில உலகங்களுக்கும் நன்மையைத் தருபவரும்
ானை முகங் கொண்ட அசுரர்களைக் கொன்றவரும், பெரிய
யிறுள்ளவரும், சிறந்தவரும், சிறந்த யானைமுகக்
டவுளும் அழிவற்றவரும், கருணைக்கடலும், பொறுமைக்
டலும் ஆனந்தக் கடலும், புகழ் வடிவானவரும், தன்னை
ணங்குபவர்க்கு அருள்புரிபவரும், ஒளிவிட்டுப் பிரகாசிப்
வருமான அந்த விநாயகப் பெருமானை நான் நமஸ்கரிக்
ின்றேன்.

अकिञ्चनार्तिमार्जनं चिरन्तनोक्तिभाजनं
पुरारिपूर्वनन्दनं सुरारिगर्वचर्वणम्।
प्रपञ्चनाशभीषणं धनञ्जयादिभूषणं
कपोलदानवारणं भजे पुराणवारणम्॥ ४ ॥

அகிஞ்ச நார்த்திமார்ஜனம் சிரந்தனோக்தி பாஜனம்
புராரி பூர்வநந்தனம் ஸுராரிகர்வசர்வணம் ।
ப்ரபஞ்சநாச பீஷணம் தநஞ்ஜயாதி பூஷணம்
கபோலதாநவாரணம் பஜே புராணவாரணம் ॥

4. ஏழைகளின் துயரத்தைப் போக்குபவரும், வேத வாக்கியங்களால் துதிக்கப்படுபவரும், முப்புரமெரித்த சிவபெருமானின் மூத்த குமாரரும், தேவர்களுக்குப் பகைவர்களான அசுரர்களின் கர்வத்தை அடக்கியவரும், உலகத்தை அழிக்கும் காலத்தில் பயங்கரமானவரும், தனஞ்ஜயன் முதலான ஸர்ப்பங்களை ஆபரணமாக அணிந்திருப்பவரும், கன்னத்தில் மதஜலமுள்ளவரும், புராதனமான யானை வடிவுடையவருமான மஹாகணபதியை நான் பஜிக்கின்றேன் (ஸேவை செய்கின்றேன்)

नितान्तकान्तदन्तकान्तिमन्तकान्तकात्मजम्
अचिन्त्यरूपमन्तहीनमन्तरायकृन्तनम् ।
हृदन्तरे निरन्तरं वसन्तमेवयोगिनां
तमेकदन्तमेकमेवचिन्तयामि सन्ततम् ॥ ५ ॥

நிதாந்தகாந்ததந்தகாந்தி-மந்தகாந்தகாத்மஜம்
அசிந்த்யரூப மந்தஹீன மந்தராயக்ருந்தநம் ।
ஹ்ருதந்தரே நிரந்தரம் வஸந்தமேவ யோகிநாம்
தமேகதந்தமேக மேவ சிந்தயாமி ஸந்ததம் ॥

5. மிகவும் அழகிய பற்களால் உண்டான காந்தியை உடையவரும், காலனுக்கும் காலனான சிவபெருமானது குமாரரும், மனதினால் எண்ணிப் பார்க்கவும் முடியாததான பேருருவம் உடையவரும், முடிவு என்பதே இல்லாதவரும்

தன்னை ஆச்ரயிப்போர்களுடைய இடர்களை அகற்றுபவரும் யோகிகளின் உள்ளத்திலே நிரந்தரமாக வசிப்பவரும், ஒரே தந்தமுள்ளவருமான அந்த கணபதி ஒருவரையே நான் எப்பொழுதும் சிந்திக்கின்றேன். (தியானிக்கின்றேன்)

महागणेशपञ्चरत्नमादरेण योऽन्वहं
प्रजल्पति प्रभातके हृदि स्मरन् गणेश्वरम् ।
अरोगतामदोषतां सुसाहितीं सुपुत्रतां
समाहितायुरष्टभूतिमभ्युपैति सोऽचिरात् ॥ ६ ॥

மஹாகணேச பஞ்சரத்ந மாதரேண யோங்வஹம்
ப்ரஜல்பதி ப்ரபாதகே ஹ்ருதி ஸ்மரன் கணேச்வரம்
அரோகதாமதோஷதாம் ஸுஸாஹிதீம் ஸுபுத்ரதாம்
ஸமாஹிதாயுரஷ்டபூதிமப்யுபைதி ஸோऽசிராத் ॥

6. மஹாகணேசரைப் போற்றுகின்ற இந்த பஞ்சரத்ன ஸ்தோத்திரத்தை எவர் ஒருவர் பிரதிதினமும் விடியற் காலையில் எழுந்து அந்த கணேசரை கருத்தில் நிறுத்தி சொல்லுகிறார்களோ அவர்கள் எல்லா ரோகங்களிலிருந்தும் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். மற்றும் நல்ல கல்வி, சத்புத்ரபாக்கியம், நிறைந்த ஆயுள் ஆகிய வற்றையும் அஷ்ட ஐச்வர்யங்களையும் அடைவார்கள்.

ஆகையால் இந்த பஞ்சரத்ன ஸ்தோத்ரத்தை தினசரி காலையில் எழுந்தவுடன் பாராயணம் செய்ய வேண்டுமென்பது தெளிவாகிறது.

**ஸ்ரீமத் ஆதிசங்கரர் அருளிய கணேச பஞ்சரத்னம்**
**தமிழ் உரையுடன் முற்றிற்று**